திருவாவடுதுறை யாதீன வெளியீடு - 22

உ

சிவமயம்.

# பூப்பிள்ளை யட்டவணை
# பஞ்சாக்கர சிந்தனை
# ஞானபூசை



சர்வதாரி மார்கழி

1949.

உ
சிவமயம்.

545

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து
3-வது குருமகா சந்நிதானம்
ஸ்ரீ அம்பலவாணதேசிக மூர்த்திகள்
அருளிச்செய்த

# * பூப்பிள்ளை அட்டவணையும்,
# * பஞ்சாக்கர சிந்தனையும்,
# * ஞான பூசையும்.

இவை

ஷை ஆதீனத்து
20-வது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள்
கட்டளையிட்டருளியபடி,

*

ஷை ஆதீனத்து வித்துவான்
தி. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையால்
பரிசோதித்துப் பதிப்பிக்கப்பட்டன.



திருவாவடுதுறை ஆதீனத்தில் 20-வது பட்டத்தை வகித்திருக்கும்
ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண பண்டாரசந்நிதிகள்

சிவமயம்.

# முன்னுரை.

—:—

"கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான பாநு
[வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி வாயதேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி தழைக மாதோ."

ஸ்ரீமாதவச் சிவஞான சுவாமிகள்.

பூப்பிள்ளையட்டவணை என வழங்கும் உயிரட்டவணை யென்னும் நூல் திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனப் பிரதம பரமாசாரிய மூர்த்திகளாகிய ஸ்ரீ பஞ்சாக்கர தேசிக மூர்த்திகள் திருவருளுபதேசம் பெற்ற 3வது குரு மகாசந்நிதானம் ஸ்ரீ அம்பலவாண தேசிகசுவாமிகள் பூப்பிள்ளை என வழங்கிய தமது தவசுப்பிள்ளையின் பொருட்டு எளிய உரை நடையில் அருளிச்செய்தது. சைவ சித்தாந்த சாஸ்திரங் கற்போருக்கு அடிப்படையாகவுள்ள சில உணர்ச்சிகளை யுண்டுபண்ணும் சிறப்புடையது.

இவ்வுயிரட்டவணையைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் தமது நான்காவது வெளியீடாக 1921-ம் வருடத்திலே வெளியிட்டார்கள். இப்போது இது ஆதீனத்து வெளியீடாக சில திருத்தங்களுடன் வருகிறது.

பஞ்சாக்கர சிந்தனை யென்பது ஷை 3-வது மகாசந்நிதானம் ஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள் அருளிச் செய்ததேயாம். ஷை தேசிக சுவாமிகள் திருவருளுபதேசம்

பெற்ற உலகுடைய நாயனுர் தாம் அருளிச் செய்த கழிநெடில் ஆசிரியவிருத்தம் 10-வது திருப்பாட்டில் "முந்துமாகமத்தை யருட்டுறை யண்ணல் மொழி பெயர்த்துரைத்த நூல் முதலா முதல் வழி சார்பா மூன்று நூற் கருத்தும் — உயிர்களுக் கிரங்கி நற்கதி கொடுத்திடவேண்டிச், சிந்தனையாக்கிப் பதிப்சு பாசந் தெரிந்திடலளிதமா வுரைத்துன் — திருவடி நீழன் மருவிட வைத்த தேசிக சிகாமணி" யெனத் தமது ஆசிரி யரைத் துதித்திருப்பது காண்க.

ஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள் அருளிச்செய்தன, (1) தசகாரியம், (2) சன்மார்க்க சித்தியார், (3) சிவாச்சிர மத் தெளிவு, (4) சித்தாந்தப் பஃறொடை, (5) சிந்தாந்த சிகாமணி (6) உபாய நிட்டை வெண்பா, (7) உபதேச வெண்பா, (8) நிட்டை விளக்கம், (9) அதிசய மாலை, (10) நமச்சிவாய மாலை முதலிய செய்யுள் நூல்களும், பூப்பிள்ளை அட்டவணையாகிய உரை நடையுமாகும். இனி, சிவஞான போத சிந்தனை, சிவஞான சித்தியார் சிந்தனை, சிவப்பிரகாச சிந்தனை, இருபா இருபஃது சிந்தனை, உண்மை விளக்க சிந் தனை முதலிய மெய்கண்ட நூல்களின் சிந்தனைகள் இத் தேசிக சிகாமணி அருளிச் செய்தனவே. இச் சிந்தனைகளெல்லாம் இவ்வாதீன வெளியீடாக விரைவிலே வெளிவர விருக்கின்றன.

ஞான பூசை என்னும் வசன நூல் செய்த ஆசிரியரிவர் என விளங்கவில்லை. ஆயினும், ஞானபூசையைப்பற்றி வசன வடிவில் அமைந்த இந் நூலையும் பாதுகாத்தல் வேண்டிப் பதிப்பிக்கப் பெறுகிறது. வாதுளாகம சாரமான ஞான பூசா விதி பழைய வுரையுடன் 1942 ஆவது ஆண்டிலே இரண்டா வது வெளியீடாக இவ்வாதீனத்திலே அடியேனுக்கு முன்பு ஆதீன வித்துவானுக விளங்கிய வி. சிதம்பர ராமலிங்க பிள்ளை யவர்கள் பதிப்பித்துள்ளார்கள்.

இந் நூல்கள் பல ஆண்டுகளுக்கு முன்பே எனக்குக் கிடைத்துள்ளன. என்னுடைய தமிழாசிரியர்களுள்ளே ஒருவரும், ஸ்ரீ மீனாட்சி தமிழ்க் காலேஜில் பிரின்ஸ்பாலாக இருந்து பல நன்மாணவர்களுக்கு ஆதீனத்துக் கல்வியை முறையாகப் பாடஞ்சொல்லி விளங்கினவர்களும், திருவாவடுதுறை யாதீன வித்துவானாக இருந்தவர்களுமாகிய ஸ்ரீ சு. பொன்னோதுவா மூர்த்திகளுடைய ஏட்டுப் பிரதிகளைப் பார்த்துச் செப்பஞ்செய்து ஏறக்குறைய இருபது வருடங்களாயின. அடியேன் இவ்வாதீன கைங்கரியத்தை மேற்கொண்டபின் ஆதீனத்துப் புத்தகசாலையிலுள்ள சுவடிகளையும் பார்த்துத் திருத்தம் செய்துகொண்டேன். பின்பு இச் செய்தியை ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானத்தில் விண்ணப்பஞ் செய்ய நேர்ந்தேன்.

இப்பொழுது இவ்வாதீனத்திலே 20வது மகா சந்நிதானமாக எழுந்தருளிக் குருக்ஷேத்திர பரிபாலனம், சிவக்ஷேத்திர பரிபாலனம், சித்தாந்த சைவசமய பரிபாலனம், செந்தமிழ்ப் பரிபாலனம் முதலியன செய்து புகழுடன் விளங்கும் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாணதேசிக சுவாமிகள் உடனே அச்சிடுவிக்குமாறு அடியேனுக்குக் கட்டளையிட்டருளினார்கள். அவர்களது திருவாணையைச் சிரமேற்கொண்டு என் சிற்றறிவுக்கெட்டிய அளவில் இவைகளைப் பரிசோதித்து முடித்திருக்கிறேன். குணங்கொண்டு கோதாட்டுதல் அறிஞர் கடன்.

திருவாவடுதுறை,<br>சர்வதாரி, மார்கழி<br>...........உ

த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை,<br>ஆதீன வித்துவான்.

---

குறிப்பு:—சதமணிக் கோவை பழைய பொழிப்புரையுடன் அச்சாகி வருகிறது. விரைவில் வெளிவரும்.

## பொருளடக்கம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உயிரட்டவணை அல்லது பூப்பிள்ளையட்டவணை.

உயிர்களை எண்ணித் தொகை பண்ணப்படாது. பிறப்புமில்லை; இறப்புமில்லை. சிவனைப்போல அழியாமலிருக்கும். எந்தக்காலமும் ஆணவமலத்துடனே கூடியிருக்கும். அது எப்படிப்போல? அரிசிக்குத் தவிடு போலவும், செம்புக்குக் களிம்புபோலவும், கடல் நீருக்கு உப்புப்போலவும் இப்படி ஆயிரம் உவமையுண்டு.

ஆணவமலம் உயிரை மயக்குகிற படியினாலே அதற்குச் சாமியம் :— குழந்தைப் பருவம் உயிரை மயக்குகிறது போலவும், பயித்திய குணம் உயிரைமயக்குகிறதுபோலவும், கள்உண்டவனை மயக்குகிறது போலவும் இப்படி ஆயிரம் உவமையுண்டு.

உயிரை ஆணவமலம் மயக்குகிறபடியினாலே உயிருக்கு நல்வினை, தீவினைகளிலே ஆசை வரும். அது எப்படிப்போல? பசி சோற்றிலே ஆசையை உண்டாக்குகிறது போலவும், குருடு கோலிலே ஆசையை உண்டாக்குகிறது போலவும், பிணி மருந்திலே ஆசையை உண்டாக்குகிறது போலவும் இப்படி ஆயிரம் சாமியம் உண்டு.

உயிருக்கு ஆணவமலம் கொடுத்த ஆசையைச் சிவன் அறிந்து உயிர்க்குத் தனு, கரண, புவன, போகங்களை இடைவிடாமல் மாற்றி மாற்றிக் கொடுத்துக்கொண்டே இருப்பர். அது எப்படிப்போல? வியாதியினாலே மருந்திலே ஆசைப்பட்டவனுக்குப் பண்டிதன் அறிந்து மருந்துகொடுக்கிறது போல என்றறிக. இது உயிருக்கு அநாதியில் உள்ள செய்தி.

எல்லா உயிர்களுக்கும் இச்சையும், அறிவுந், தொழிலும் எந்தக்காலமும் இடைவிடாமலிருக்கும். ஆணவ மலத்துடனே மாத்திரம் கூடியிருக்கிற உயிர்களுக்கெல்லாம் விஞ்ஞானகலர் என்றும்; ஆணவமலத்துடனேயும், கன்ம மலத்துடனேயும், கூடியிருக்கிற உயிர்களுக்கெல்லாம் பிரளயாகலர் என்றும்; ஆணவ மலத்துடனேயும், கன்ம மலத்துடனேயும், மாயா மலத்துடனேயுங் கூடியிருக்கிற உயிர்களுக்கெல்லாம் சகலர் என்றும் பெயர்.

உயிரிலக்கணம் முற்றும்.

---

**ஆணவம்**

ஆணவமலம் ஒன்றுயிருந்து எல்லா உயிர்களையும் மயக்கும். நல்ல நினைவுகளை மறப்பிக்கும். பொல்லாத நினைவுகளை நினைப்பிக்கும். நல்ல சொற்களைச் சொல்லவொட்டாது. பொல்லாத சொற்களைச் சொல்லுவிக்கும். நல்ல தொழில்களைச் செய்யவொட்டாது. பொல்லாத தொழில்களைச் செய்வித்துக் கொண்டேயிருக்கும். உயிருக்கு ஊதியமாகவுள்ள காரியங்களை ஒருகாலத்தும் செய்யவொட்டாது. உயிருக்குக் கேடு வருகிற காரியங்களை எந்தக்காலமும் இடைவிடாமற் செய்வித்துக்கொண்டேயிருக்கும். உயிரினுடைய நல்ல அறிவை எந்தக் காலமும் இடைவிடாமற் கெடுத்துக் கொண்டே யிருக்கும். உயிருக்குப் பொல்லாத அறிவை எந்தக் காலமும் இடைவிடாமற் கொடுத்துக்கொண்டே யிருக்கும்.

ஆணவம் முற்றும்.

---

**கன்மம்**

நல்வினை-க, தீவினை-க, ஆக 2. மன நல்வினை, வாக்கு நல்வினை, சரீர நல்வினை, பசு நல்வினை, சிவ நல்வினை, புத்திபூர்வ நல்வினை, அபுத்தி பூர்வ நல்வினை இப்படி இன்னும் பலவிதமுண்டு. தீவினைக்கும் இந்த

முறைமையே கண்டுகொள்க. நல்வினைகளுக்குப் பசு புண்ணியம் என்றும், சிவபுண்ணியம் என்றும் இரண்டு பலன் வரும். தீவினைகளுக்குப் பசுத் துரோகம் என்றும், சிவத்துரோகம் என்றும் இரண்டு பலன் வரும்.

இனி, புண்ணியங்களுக்குப் பலன் இன்பமே வரும். பாவங்களுக்குப் பலன் துன்பமே வரும். வினைகளுக்கெல்லாம் தூலகன்மம் என்று பெயர். இந்த வினைகளுக்குப் பிறகு பலனாக வருகிற புண்ணியபாவங்களுக்குச் சூக்கும கன்மம் என்று பெயர், இந்தப் புண்ணியபாவங்களுக்குப் பிறகு பலனாக வருகிற இன்பதுன்பங்களுக்கு அதிசூக்கும கன்மமென்று பெயர். இருவினைக்கு ஆகாமியம் என்று பெயர். இருவினைப் பலனாகிய புண்ணிய பாவங்களுக்குச் சஞ்சிதம் என்று பெயர். புண்ணிய பாவங்களுக்குப் பலனாகிய இன்பதுன்பங்களுக்குப் பிராரத்த மென்று பெயர். பயிரிடுகிறதுபோல இருவினைகள் பயிர்ப் பலனைக் களஞ்சியத்திலே கட்டிவைக்கிறதுபோலப் புண்ணிய பாவங்கள், கட்டிவைத்ததிலே சிறுகச்சிறுக எடுத்து உண்கிறதுபோல இன்ப துன்பங்களை அநுபவிக்கிறது.

இன்பதுன்பங்கள் தெய்வீகத்தினாலேயும் வரும்: பஞ்சபூதங்களினாலேயும் வரும்: பிறவுயிர்களினாலேயும் வரும்: ஆக ௩. தான் இச்சைப்பட்டு வருகிறதும் உண்டு: தான் இச்சைப் படாமல் வருகிறதும் உண்டு: இச்சையானபடிக்கு வராமல் வேறொன்று வருகிறதும் உண்டு: ஆக, ௩.

கன்மமலம் முற்றும்.

---

சுத்த வித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆக (௫) தத்துவமும்; சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி ஆக நாலு வாக்கும்; ஐம்பத்தொரு அட்சரமும்; எண்பத்தொரு பதமும்; ஏழு கோடி மகா மந்திரங்களும்; இருபத்

தெட்டு மூல வாகமங்களும்; 207 உபாகமங்களும்; நான்கு வேதங்களும்; பதினெட்டுப் புராணங்களும் ஆறு சாத்திரங் களும், அறுபத்து நாலு கலை ஞானங்களும்; சிவபேதங்களுக்கும், சத்தி பேதங்களுக்கும், நாதபேதங்களுக்கும், விந்துபேதங்களுக்கும், சதாசிவ பேதங்களுக்கும், மகேசுரபேதங் களுக்கும், உருத்திர பேதங்களுக்கும், விஞ் ஞான கலர்களுக்கும், பிரளயாகலர்களுக்கும் சரியை கிரியை யோக முடையவர்களுக்கும் தனு கரண புவன போகங்களுக்கும், நிவர்த்திகலை பிரதிட்டாகலை வித்தியாகலை சாந்திகலை சாந்தியாதீதகலை ஆக 5ம், இப்படிப்போல இன்னும் அனந்தங்காரியங்களும் சுத்த மாயையிலேயிருந்து பிறக்கும். அது எப்படிப்போல—ஒரு பொற்கட்டியிலே பல பல ஆபர ணங்கள் பிறக்கிறது போலவும், ஒரு இருப்புக்கட்டியிலே பலபல ஆயுதம் பிறக்கிறது போலவும், ஒரு மண்ணிலே பலபல பாண்டம் பிறக்கிறது போலவும் என்க.

**சுத்த மாயை**

சுத்தமாயை முற்றும்.

---

காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன் மாயை ஆக-எ-தத்துவமும் பிரமாக்களுக்கும், விட்டுணுகளுக்கும், தேவேந்திரர்களுக்கும், ரிஷிகளுக்கும், நவக் கிரகங்களுக்கும், மற்றுமுள்ள சகலர்களுக் கும் தனு-கரண-புவன-போகங்களும்; பிர கிருதி மாயையிலே யிருந்த உச-தத்துவங் களும் இப்படிப்போல இன்னும் அனந்தங் காரியங்களும் அசுத்தமாயையிலே யிருந்து பிறக்கும். அதெப்படிப்போல; ஒரு விதையிலே பல கொம்புகளும், பல

**அசுத்த மாயை**

குழைகளும், பல பூக்களும், பல காய்களும், பல கனிகளும் பிறக்கிறது போலவும்; ஒரு சந்தன மரத்திலே பலபல சந்தனச்சேறு பிறக்கிறது போலவும்; ஒரு நெல் விதையிலே பல நெல்லுகள் பிறக்கிறது போலவும்; ஒரு மேகத்திலே பல பிரிவுகளும், பல சத்தங்களும், பல இடிகளும், பல மின்களும் பலபல இந்திர தனுக்களும் பிறக்கிறதுபோலவும் என்க.

அசுத்தமாயை முற்றும்.

---

அருவமுமல்ல, உருவமுமல்ல, உருவாருவமு மல்ல; மூன்று குணத்திலே ஒரு குணமுமில்லை; ஒன்பது நிறத்திலே ஒரு நிறமுமில்லை; நாலு மலத்திலே ஒரு மலமுமில்லை; உடம்புக்குள்ளே உயிர் இருக்கிறதுபோல உயிருக்குள்ளே உயிரா யிருப்பன். போக்குமில்லை, வரத்துமில்லை. பிள்க்கப்படாது இன்பமாயிருப்பன். நம்பினபேருக்கு மோட்சங்கொடுக்கிறவன். மற்றவர்களுக்கு அவரவர் செய்த இருவினைப்பலன்களைக் கொடுக்கிறவன். எல்லாவுயிர்களுக்கும் பெரியவன், எல்லாவுயிர்களுக்குஞ் சிறியவன் சகலத்தையும் அறிகிறவன். சகல தொழில்களையுஞ்செய்கிறவன். சகல ஆன்மாக்களுக்கும் அவரவர் விரும்பினதெல்லாங் கொடுக்கிறவன். எல்லா விடங்களிலும் நிறைந்திருக்கிறவன், இன்னும் இப்படிப் பலபல இலக்கணங்களையுடையவன். இவனை ஒருவருங் காணமாட்டார்கள். ஆனபடியினாலே, உயிர்கள் கண்டு பூசைபண்ணும்படிக்குப் பல உருவங்களை யெடுத்துக்கொண்டு பூசை முதலாகிய பணிவிடையுங் கொண்டருளிப் பணிவிடைக்குத்தக்க பலன்களையுங் கொடுப்பன். சிவனுக்கு இச்சையும் அறிவுந் தொழிலும் எந்தக்காலமும் இடைவிடாமலே யிருக்கும்.

**பரமசிவம்**

பரமசிவன்-பராசத்தி, சிவன்-சத்தி, நாதம்-விந்து சத்தி, சதாசிவன் - மனோன்மணி சத்தி, மகேசுரன்-மகேசுரி சத்தி, உருத்திரன் - உமாசத்தி, மகா விட்டுணு - இலக்குமிசத்தி, பிரமா-சரஸ்வதி சத்தி ஆகச் சிவபேதம்-அ, சத்திபேதம்-அ.

பதியிலக்கணம் முற்றும்.

---

முட்டைப் பிறப்பு, வேர்வைப் பிறப்பு, விதைப் பிறப்பு, தோற்பைப் பிறப்பு ஆக-ச. இந்த நாலு பிறப்பிலேயிருந்தும் விரிந்த பிறப்புக்கு வகை:—மரப்பிறப்பு, ஊர்வைப் பிறப்பு, தெய்வப்பிறப்பு, நீர்வாழ் பிறப்பு, பறவைப் பிறப்பு, நாலுகாற் பிறப்பு, மனுடப்பிறப்பு ஆக-எ. இந்த எழுவகைப் பிறப்பிலே யிருந்தும் விரிந்த பிறப்புக்கு வகை:—மரப் பிறப்புப் பேதம்-கக லட்சம், ஊர்வைப் பிறப்புப் பேதம் - கரு லட்சம், தெய்வப் பிறப்புப் பேதம்-கக லட்சம், நீர்வாழ் பிறப்புப் பேதம் - க0 லட்சம், பறவைப் பிறப்புப் பேதம்-க0 லட்சம், நாலுகாற் பிறப்புப் பேதம்-க0 லட்சம், மனுடப் பிறப்புப் பேதம்-கூ லட்சம்; ஆக பிறப்புப் பேதம் - அச லட்சம். இந்த அச லட்சம் பிறப்பிலேயிருந்தும் விரிந்த பிறப்புக்களுக்கு வகை:—

தனு

ஒரு தேக்கமரத்திலே பேதப்பிறப்பு வருகிற வகை:— சந்தனத்தேக்கு, கல்லுத்தேக்கு, சுரைத்தேக்கு, தவிட்டுத் தேக்கு, நாய்த்தேக்கு, நரித்தேக்கு, பெரிய தேக்கு, சிறிய தேக்கு இவை முதலானதுபோல அந்தந்தப் பிறப்புக்கும், அனந்தம் பிறப்புப் பேதம் உண்டு. அச லட்சம் பிறப்புக்கும் இவைபோல என்றறிக.

தனு முற்றும்.

பூதம்-ரு, ஞானேந்திரியம்-ரு, கன்மேந்திரியம்-ரு, சத்தாதி விடயம்-ரு, அந்தக்கரணம்-ச. ஆக ஆன்ம தத்துவம்-உச. வித்தியா தத்துவம்-எ, சிவதத்துவம்-ரு, ஆக த்த்துவம்-௩௬.

**கரணம்** பிருதிவியின் கூறு-ரு, அப்புவின் கூறு-ரு, தேயுவின் கூறு-ரு, வாயுவின் கூறு-ரு ஆகாசத்தின் கூறு-ரு, ஆக உரு; வாயு-க0, நாடி-க0, வசனாதி-ரு, வாக்கு-ச, குணம்-௩, ஆங்காரம்-௩, ஆகப் புறக்கருவிகள்-௬0. ஆக வகை 2க்குத் தத்துவம் ௯௬. மாச்சரியம்-க, அத்தவேஷணை, புத்திரவேஷணை, லோகவேஷணை ஆக ௩ல் லோகவேஷணையைத் தள்ளித் தாரவேஷணையைக் கூட்டினாருமுண்டு. ஆகத் தத்துவம் ச00.

கரணம் முற்றும்.

---

பல முழங்கூடினது ஒரு வீடு. பல வீடு கூடினது ஒரு தெரு. பல தெருக் கூடினது ஒரு ஊர். பல ஊர் கூடினது ஒரு நாடு. பல நாடு கூடினது ஒரு தேசம். பல தேசங் கூடினது ஒரு கண்டம். பல கண்டங்கூடினது ஒரு உலகம். பல

**புவனம்** உலகங் கூடினது ஒரு அண்டம். அண்டங்களுக்கு இவ்வளவென்று ஒரு மட்டுச் சொல்லப்படாது. அது எப்படிப்போல; கடுகு, கீரைவிதை, எள்ளு, அத்திக்காய்க்குள்ளேயிருக்கிற விதை, தினை இவை முதலானதுக்கெல்லாம் பிரமாணந் தெரியும். பூமியிலே முன்னே எழுதின பதார்த்தங்களுக்கு எண்ணித்தொகை பண்ணப்படாது. இப்படிப்போல அண்டங்களுக்கும் பிரமாணந்தெரியும். அண்டங்களை யெண்ணித் தொகை பண்ணப்படாது.

புவனம் முற்றும்.

---

உயிர்களுக்கு இரத்தினம், சுவர்ணம், சந்தனம், மாலை, பெண் இவை முதலான பதார்த்தங்களிலே விருப்பமாகவே யிருக்கும். புலி, பாம்பு, தேள், நட்டுவக்காலி, வியாதி இவை முதலான பதார்த்தங்களிலே வெறுப்பாகவே யிருக்கும். ஆக இந்த இரண்டுவகைப் பதார்த்தங்களுக்கும், இவ்வளவென்று எண்ணத் தொகை இல்லை. தொகையில்லாதே

**போகம்**

போனாலும் சத்தப் பரிச, ரூப, ரச, கந்தம் ஆக இந்த அஞ்சிடமாக அடங்கியிருக்கும். இனிச் சத்தமானது விருப்புச் சத்தம், வெறுப்புச் சத்தம் என்று இரண்டு வகைப்படும். மற்ற நாலுக்கும் எட்டு வகையாகக் கண்டுகொள்க. ஆக கo வகையில் ஒவ்வொன்றும் அளவிறந்ததாக வரும். இப்படி அளவிறந்ததாக இருந்தாலும் இன்ப துன்பம் இரண்டுக்கும் ஏதுவாகவே வரும். போகங்கள் வருகிறதெல்லாம் இன்பதுன்பம் இரண்டும் ஏற்றுக் கொண்டு அனுபவிக்கிறதேயல்லாமல் மூன்றாவது அனுபவம் ஒரு செனனத்துக்கு மில்லை.

போகம் முற்றும்.

---

அபுத்தி பூருவம், புத்தி பூருவம், உபாயச் சரியை, உபாயக் கிரியை, உபாய யோகம், உபாய ஞானம், உண்மைச் சரியை, உண்மைக் கிரியை, உண்மை யோகம், உண்மை ஞானம் ஆக கo. இதில் ஒன்பது சிவபுண்

**சிவ புண்ணியம்**

ணியமும் இவனைகச்செய்து முடித்தபின்பு பரமசிவன் ஞானசாரியராக எழுந்தருளி உண்மை ஞானம் என்கிற சிவ புண்ணியத்தைக் கொடுப்பார். அந்த ஞானமொன்றும் பத்துவிதமாக இருக்கும். இதற்கு வகை:—தத்துவ ரூபம், தத்துவ தெரிச

னம், தத்துவ சுத்தி ; ஆன்ம ரூபம், ஆன்ம தெரிசனம், ஆன்ம சுத்தி ; சிவ ரூபம், சிவ தெரிசனம், சிவயோகம், சிவபோகம் ஆக கo. இதில் ஒன்பதும் உயிர் கண்டு கழிப்பன். சிவ போகம் ஒன்றை மாத்திரம் எந்தக் காலமுங் கண்டுகொண்டே யிருப்பன். ஒருக்காலும் தள்ளமாட்டான். இதற்குமேல் உயிர்க்கு ஊதியம் ஒன்றுமில்லை. இதனையே எக்காலமும் புசித்துக்கொண்டே யிருப்பன்.

சிவபுண்ணியம் முற்றும்.

உயிரட்டவணை யென்னும் பூப்பிள்ளை அட்டவணை முற்றிற்று.

ஸ்ரீ மெய்கண்டதேவர் திருவடி வாழ்க.

ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் மலரடி வாழ்க !

---

"சுவாமிநாத குருவின் திருவடிகள் அடியேன் சிந்தையினும், சென்னியினும் நீங்காமல் இடையறாது பொருந்தி வாழ்க. பன்னிரு நயனத்தறுமுக நயினர் சிவானந்த குஞ்சிதபாத தாமரைகள் வாழ்க. அம்பலத்தாடுமணி நின்மலானந்த குஞ்சிதபாத தாமரைகள் வாழ்க. நின்மலானந்த சற்குரு ஞான தேசிகன் திருவடி வாழ்க."

— என்னும் இப்பகுதி ஏட்டிற் கண்டது

---

குறிப்பு :—மேலே குறித்த ஸ்ரீ சுவாமிநாதகுரு என்பவர்கள் இலக்கணக்கொத்து ஸ்ரீ சாமிநாத தேசிக மூர்த்திகளோ அல்லது சாஸ்திரம் சாமிநாத முனிவரோ என விளங்கவில்லை. இந்த ஏட்டுப் பிரதி எழுதியவர் அவருடைய மாணக்கர் போலும்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பஞ்சாக்கர சிந்தனை.

பஞ்சாட்சரமாவது சிவயநம வென்றிருப்பது. இதற்குப் பொருள்:—'சிகார வகாரஞ் சிவனொடு சத்தி—யகார மதுவே யான்மா வாகும்—நகார மதுவே நற்றிரோ தாயி—மகார மதுவே மலமென லாமே.' ஆக இவை ஐந்து பொருளும் அநாதியாய், நித்தமாய், வியாபகமாய், அருவமாய், அகண்டிதமாய், ஒன்றாய், ஒரு கொத்தாயிருக்கும். இதில் ய - ஆன்மாவானது அபக்குவத்தினாலே, ம - மலத்தினுடனே கூடி., ந-நகாரமாகிய திரோதாயி தாரகமாகப் பொய்யை மெய்யென்று மாறுபாடாகக் கருதிச் செனன மரணங்களிலே சுழன்று நிற்கும். பக்குவம் வந்தவுடனே ம-மலம், சி-சிவத்திலே ஒடுங்கிப்போம். நகாரமாகிய திரோதாயி வ-அருளிலே ஒடுங்கிப்போம். ய-ஆன்மாவும், வகாரமாகிய அருளும் ஒன்றாய்ப்போய் வசி யாம். இதற்குத் திட்டாந்தம் எப்படி யென்னில்:-சூரியன், கிரணம், கண், விளக்கு, இருள். இருளிலே கலந்த கண்; விளக்குத் தாரகமாகப் பழுதையைப் பாம்பென்றும், இப்பியை வெள்ளி யென்றும், குற்றியைப் பிள்ளையென்றும், திரிவு காட்சியாகக் கண்டுகொண்டே யிருக்கும். ஆதித்தப் பிரகாசம் வந்தவுடனே இருள் ஒளியிலே அமிழ்ந்திப்போம். விளக்குச் சத்தி கெட்டுப் போம். கண்ணுமொளியும் ஒன்றாகிப்போம். சூரியனைப் போலும், சி - சிவன். கிரணத்தைப்போலும், வ - அருள்.

கண்ணைப்போலும், -ஆன்மா. விளக்கைப்போலும், ந-திரோதம். இருளைப்போலும், ம - மலம் இப்படி யறிக. இது பஞ்சாட்சர சிந்தனை.

" அஞ்செழுத்து மண்ணலரு ளான்மாத் திரோதமலம்
விஞ்சி நமத்துரந்து மெய்யருள்வத் — தஞ்சச்
சிகாரத்தில் யவ்வைவிடுந் தீதிலா வின்பப்
புகாரிற் புகுந்தருந்தப் போய்."

— (துகளறுபோதம் 82 செ.)

முற்றிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஞான பூசை.

விடியற்காலம் எழுந்திருந்து தேகசுத்தி பண்ணி விபூதி தரித்துப் பிராணாயாமம் முதற்பண்ணி மூலஞ் செபித்துச் சிவோகம் பாவித்து வெளியே புறப்பட்டுச் சௌசம், பற்கொம்பு முதற்பண்ணிச் சிவதீர்த்தத்திலே வந்து வேட்டி துவைத்துக் கட்டிச் சலத்திலே இறங்கித் தீர்த்தத்தைப் பரமானந்த சொரூபமாகக்கண்டு விதிப்படி ஸ்நானம் பண்ணித் தலை துவட்டி யனுட்டானம் மூலமந்திரத்தினாலே செய்து சமயாசாரியர், சந்தானாசாரியர்களுக்குந் தர்ப்பித்துப் பின்பு செபம் பண்ணிச் சிவத்தியானம்பண்ணி ஆகமார்ச்சனைபண்ணி வாசித்துச் சிவாலயம் தெரிசனம் பண்ணும்படி பரிபூரண வியாபகமுணர்ந்து தன்னுடைய ஆசாரியராகக் கண்டுதெரிசித்துப் பின்பு விபூதி யுத்தூளனம் பண்ணிப் பூசைத் தானத்திலே வந்திருந்து குருவைத் தியானம்பண்ணி விதிப்படி இடம் பண்ணித் திருமஞ்சனஞ் சுத்திசெய்து இரண்டர்க்கியங் கூட்டித் தன்னையும் பூசைத் தானத்தையும் புரோட்சித்துச் சமயாசாரியர் தென்பக்கத்திலுஞ் சந்தானாசாரியர் வடபக்கத்திலும் பூசித்துப் பூதசுத்தி 36 தத்துவங்களுந் தோன்றின முறைமையிலே யொடுக்கிப் பின்பு அருளாகக்கண்டு அந்தரியாகம் தன்னுடைய தேகம் சிவாலயமாகவும், இருதயங் கெர்ப்பக்கிரகமாகவும், ஆன்மா லிங்கமாகவும், சிவம் ஆவாகன மூர்த்தியாகவும் இப்படிக்கண்டு அந்தச் சிவனை மறவாமலிருக்கிறதே விளக்காக்கி அன்பே அபிஷேக நீராக்கித் தன்னிச்சையே

ஆபரணமுதலர்ச்சனையாக்கி எப்பொருளுமதுவாகக் காணு கிறதே நிவேதனமாக்கித் தான்றேன்றுமனேயமா யிருப்பதே தோத்திர முதலாக்கி இப்படிப் பண்ணக்கடவது. பின்பு தான சுத்தி பூசைத் தானத்தை அட்டசங்காரம்பண்ணி அஷ்ட மூர்த்த முணரவும், திரவியங்களெல்லாம் அர்க்கியம் புரோட் சித்து அட்டசங்காரம் பண்ணி அருளாகக் காண்பது திரவிய சுத்தி. தன்னை யாசனமூர்த்திமானகக் கண்டு ஆசனமூர்த்தி மூலமர்ச்சித்து மந்திர மருளாகக்கண்டு பத்துருச் செபிக்க மந்திரசுத்தி. சிவலிங்கம் ஞானவேதிகையிலே யெழுந்தருளப் பண்ணிக் குச்சுப்புல் முதற்சாத்திப் பத்து மந்திரத்தாலர்ச்சித் துச் சிவ வியாபகமுணர்ந்து சிவமாகக் காண்பது லிங்கசுத்தி. பின்பு ஆசனமூர்த்தி மூலஞ் சாத்தித் தெக்ஷிணமூர்த்தமாகத் தியானித்து வேண்டுகொண்டு அர்க்கிய மர்ச்சனை தூபதீபம் பணிமாறி அட்டபுட்பஞ் சாத்தி அபிஷேக முறையே யபிஷே கித்துத் திருவொற்றுடை சாத்திப், பரிவட்டம், ஆபரணம், விபூதி, சந்தனம், இண்டை முதலானவை தரித்து அட்ட புட்பஞ் சாத்தித் தூபதீப மர்க்கியங்கொடுத்துப் பின்பு மூலத் தால் அவயவந்தோறு மர்ச்சித்துப் பாதத்தில் வேண்டுமளவு மர்ச்சித்து வெகு திருநோக்கமாகவும் கிருபையாகவும் வெகு திருக்கூட்டத்தோடுங்கூட வெழுந்தருளியிருக்கிற கோலந் தரி சித்து, நிவேதனம் பண்ணி, அர்க்கியந் தூபதீபம் பெரிய தீபங் கர்ப்பூரதீபம் ஆலத்தி பணிமாறித் தாம்பூல நிவேதனம் பண்ணி, விபூதி, கண்ணுடி, குடை, சாமரம், ஆலவட்டம், விசிறி பணிமாறி அர்க்கியங்கொடுத்துப் புட்பஞ்சாத்தி நிரம் பத் திருநோக்கந் தெரிசித்துச் செபித்து, அங்கே கொண்டரு ளின பணிவிடைக்குள்ளன அங்கே கொண்டருளப்பண்ணி ஆன்மா சுதந்தா மின்மையு முணர்ந்து ஆட்கொண்டு தானக வைத்த கருணையுமுணர்ந்து தோத்திர நமஸ்காரம் பிரதெக்ஷி

ணம் வேண்டு புகழ்பண்ணி எல்லாம் நீயெனத் தியானம் உள்ளபடி பண்ணி யுணர்ந்து கிருபைபெற்று இரண்டு தரம் அட்டபுட்பம் சாத்திப் பரிபூரண முணர்ந்து சிவலிங்கத்திலே யொடுக்கிச் சாத்தி சுவாமியைப் பெட்டகக் கோயிலிலே யெழுந்தருளப்பண்ணிப் பின்பு தம்முட் குருவைப் பூசித்துச் சிவாலயம் பெரியோர்களை யர்ச்சித்து ஆகம மர்ச்சித்துப் பிராணாயாமமுதல் பண்ணி மூலஞ் செபித்துச் சிவத்தியானம் பண்ணவும். பின்பு, போசனம் இடம் பண்ணி அமுதுமுதல் படைத்துச் சுத்திபண்ணி மூலஞ் செபித்து, அருளாகக்கண்டு தன்னுடைய குருவுக்கு நிவேதனம் பண்ணிக் குருவைத் தானாகக்கண்டு புசிக்கவும். மூன்றுகால மனுட்டானம் பண்ண வும். சிவாலய நியதியாகத் தெரிசனம் பண்ணவும். சிவனடி யாருடன் வாழ்ந்திருக்கக் கடவது.

திருச்சிற்றம்பலம்.

ஞானபூசை முற்றிற்று.

---

ஸ்ரீ வித்யா பவர் பிரஸ், கும்பகோணம்.